சிவமயம்.

கோவிலூர் மடம்

ஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகளவர்கள்

திரட்டிய

# சீடாசார மூலமும்,

திருக்களர்

ஸ்ரீ வீர சேகர ஞான தேசிக ஸ்வாமிகளவர்கள்

மாணாக்கர்

திருப்பூவண மடாதிபதி

ஸ்ரீலஸ்ரீ காசிகாநந்த ஞானாசார்ய ஸ்வாமிகள்

இயற்றிய

# பால போதிநி என்னும் உரையும்.

இவை

சிதம்பரம் - கோ. சித. மடம்

ஸ்ரீ சித. நீலகண்ட ஸ்வாமிகள்

அவர்களால், பரிசோதிக்கப் பெற்று,

மதுரை

ஹிந்துஸ்தாந் பிரிண்டிங்

ஆபீசில் அச்சிடப் பெற்றன.

விலை அணா] 1930 [[illegible]

# முக வுரை.

இந்தச் சீடாசாரம் என்னும் நூல் கோவிலூர் மடாலயம் ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிகர் ஆதீனத்தில் இரண்டாவது குரு மூர்த்தமாக எழுந்தருளியிருந்த நூறு ஆண்டவர் என்னும் காரணப் பெயர் வாய்ந்த அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள் என்பவர்கள் தமது தம்பி யாகிய சிதம்பர ஞான தேசிகர் தமது ஆசாரியரை அகன்று ஆவுடையார் கோவிலிற் சென்று ஏகாந்த ஸ்தானத்தை யடைந்திருக்கக் கருதிச் சென்றதைக் கேள்வியுற்று, ஆசாரியரை விட்டு அகலாது அருகி லிருக்க வேண்டு மென்னும் கருத்துட் கொண்டு, அவ் வுடன் பிறந்த, சிதம்பரம் என்றும், கருணாநிதி யென்றும், வழங்கும் இளையோர் பொருட்டு ஒரு வசனம் எழுதி அதற்குப் பிரமாண மாகத் தத்துவ ராய ஸ்வாமிகள் பெருந் திரட்டுக் குறுந் திரட்டுக்களை ஆதாரமாய்க் கொண்டு, வாசிஷ்டச் செய்யுள் 1. ஒழிவி லொடுக்கச் செய்யுள் 1, சிவ நெறிப் பிரகாசச் செய்யுள் 1, சிவானந்த நிலையச் செய்யுள் 1, போத சாரச் செய்யுள் 1, சிவப்பிரகாச தரிசனச் செய்யுள் 1, தத்துவ போதச் செய்யுள் 1, தத்துவ சரிதைச் செய்யுள் 1, ஞான சித்திச் செய்யுள் 1, போத சித்திச் செய்யுள் 1, திரு மந்திரச் செய்யுள் 1, பாடு துறைச் செய்யுள் 1, சமய சாரச் செய்யுள்2, மெய்ந் நெறி விளக்கச் செய்யுள் 2, போத ரத்னாகரச் செய்யுள் 2, அருட்பிர காசச் செய்யுள் 3, மூல சித்திச் செய்யுள் 3, ரிபு கீதைச் செய்யுள் 3, போதாமிர்தச் செய்யுள் 4, ஞான சாரச் செய்யுள் 4, மெய்ம் மொழிச் செய்யுள் 6, பிரம்ம கீதைச் செய்யுள் 7, நூற் பெயர் தெரியாச் செய்யுள் 2 - ஆக ஐம்பது செய்யுட்களைத் திரட்டி எழுதி யனுப்பி னார்கள். அந் நூல் படிக்கும் சிறிய முமுக்ஷுக்கட்கு உரை யின்றி பொருள் விளங்கல் அருமை யெனக் கருதி, பொருள் எளிதில் விளங்கு மாறு பால போதினி என்னும் பெயருடன் ஓர் உரை எழுதி முற்றுவித்தனம்.

15—2—50 கா. சுவாமிகள், திருப் பூவணம்.

சிவமயம்.

அருணாசல ஞான தேசிகர்

சிதம்பர ஞான தேசிகர் பொருட்டு எழுதிய

# சீடாசார வசனம்.

ஸ்திரீ நாயகனுடன் கூட இருந்தால் பணிவிடை செய்யவேண்டும் என்றும், தனித்து இருந்தால் சுகமாய் இருக்கலாம் என்றும் நினைத்து, அந்த நாயகனுக்கு மன வருத்தம் உண்டாகும்படி அவனை விட்டு நீங்கி இருந்தால், இம்மையில் சுகமும் இழந்து, மறுமையில் நரகத் துன்பமும் அநுபவிப்பது போல, சிஷ்யன் ஞானாசாரியனைத் தேடிக் கண்டு சரணாகதி யடைந்து சில சாஸ்திரங்களை அப்பியாசித்து அறிந்தபின், "நாம் இனி இவரிடத்தில் இருந்தால் இவருக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்க வேண்டும் நமது சுவதந்திர அநுசந்தானத்திற்கு விரோதம் நாம் இவரிடத்தில் இருக்கில் நமது சுவாதந்திரத்திற்கு ஒத்துக்கொள்ளாது" எனக் கருதி, அந்த ஞானாசாரியருக்கு மனதில் துக்கம் உண்டாகும்படியாக அவரை விட்டு நீங்கியிருக்கின், அவனுக்கு இம்மையில் துன்பமும், மறுமையில் நரகமும் உண்டாகும். ஆகையால், கற்புடைய ஸ்திரீ அறியாமையைப் பொருந்தியிருந்தும், ஆத்ம ஸ்வரூபத்தினை அறியாமல் அநாத்ம ஸ்வரூபமே தான் என்றிருக்கின்ற தனது நாயகனைத் தெய்வமாகப் பாவித்து, அவன் அடித்தல் வைதல் முதலியவற்றைச் செய்த போதிலும், அவனிடத்தில் துவேஷம் இன்றிப் பிரியமாகவே தேகம் உள்ள வரை அவனை விட்டு நீங்காமல் திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்துகொண்டிருந்து, இம்மையிற் சுகத்தையும், மறுமையில் ஸ்வர்க்காதி லோகத்தையும், அடைவது போல, உத்தம விவேகம் உள்ள சிஷ்யன், "ஞானாசாரியனைச் சத்திய ஞான அநந்த ஆநந்த பரம சிவம்" என்று வேதாதிகள் சொன்ன பிரகாரம் நம்பி, அவர் அடித்தல் வைதல் முதலியவற்றைச் செய்யினும், செய்யத் தகாத கிருத்தியங்களைச் செய்யச் சொன்ன போதிலும், வெறுப் படைந்து அவரை விட்டு நீங்காதபடி மிகுந்த பிரியத்தோடு தேகம் உள்ள வரையும் திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்து நின்று, அந்த ஞானாசாரியர் கிருபையினால் தத்துவ ஞானத்தினைப் பெற்று மோக்ஷம் அடைய வேண்டும் என்று வேதாகம புராண இதிகாசாதிகள் கூறுதலால், இப் போதிருக்கின்ற முமுக்ஷுக்களும் இதிற் சொன்ன பிரகாரம் ஞானாசாரியரைப் பரம சிவம் ஆகப் பாவித்துத் தேக உள்ள பரியந்தமும் அவரை விட்டு நீங்காமல், திரிவித கரணங்களாலும் பணிவிடை செய்து நின்று அவர் கிருபையால் உண்டாகின்ற தத்துவ ஞானத்தினால் பரமோக்ஷ சுகத்தை யடைய வேண்டியது. சீடாசார வசனம் முற்றுப் பெற்றது.

# பாயிரம்.

திருவளர் துறவைச் சுகரென விளக்கித் திகழ்குணங் களுக்குறை விடமாய்த், தெருளொடு பத்தி கருணைநல் விராகஞ் சேர்ந்தோரு வுருவமா யிலகும், மருளாடு மருளை சவமுனி பதத்தை மனமொழி மெய்களால் வணங்கி, யிருளிர் சீடா சாரத்தி னுரையை யியம்புவன் மாணவர் மகிழ.

அதனது நாமம் பாலபோ திநியென் றழகுற விருப்புட னமைத்து, விதமுற பாவி னைம்பதின் பொருளும் விளங் கவே செவ்விய மொழியி, லுதவாய்த் தருகென் மாணவ, னிராக வியம்பவே யன்பனை வசமாய்த், திதம்பெறச் செய்த வுரையினை வீர சேகர விறைபதஞ் சேர்ப்பாம்.

முன்னோர்செய் ஞான நூல்கள் முழுதுமாய்ந் தவைவயி னுள்ள, பொன்னென சீடா சாரம் பொருந்துபா வனைத்துஞ் சேர்த்தான், இந்நாளி லெவரு முய்வா னெழிலரு ணாச லேசன், பன்னரு மவன்பொற் பாதம் பணிந்துபற் றறப்பா மன்றே.

சிவமயம்.

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிகாய நம:

# சீடாசாரம் மூலமும், பாலபோதிநி உரையும்.

* நான் எடுத்துக் கொண்ட கிரந்தம் நிர்விக்கிநமாக நிறைவேறும் பொருட்டுச் சகுண ரூப ஷட் வித தெய்வ வணக்கம் கூறுகின்றார்.

## காப்பு.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞாநகுரு வாணியையுண் ணாடே.

(இதன் பொருள்.) ஆனை முகன் - கஜ முகக் கடவுளையும், ஆறு முகன் - ஷண்முகக் கடவுளையும், அம்பிகை - சிவகாம சௌந்தரியையும், பொன் அம்பலவன் - கநக சபைக் கடவுளையும், ஞாந குரு - ஞாந ஆசாரியாரையும், வாணியை - சரஸ்வதி தேவியையும், உள் - மநத்தின்கண், நாடு - (நீ) தியாநிப்பாயாக. (எ-று)

(இலக்கணக் குறிப்பு:-) 'ஆனை முகன், ஆறு முகன்' என்பவாதி பெயர்களினிடையே எண்ணும்மைகள் தொக்குநின்றன- 'வாணியை' என்பதில் உள்ள 'ஐ' என்னும் இரண்டனுருபு கடைநிலைத் தீபகம்; முன்னுள்ள பெயர்களோடு சென்றியைதலின். 'நீ' என்னும் தோன்றா எழுவாய், 'நாடு' என்னும் பயனிலை கொண்டது. ஆனை முகன் முதலிய மூர்த்திகள் - செயப்படு பொருள்.

## மோக்ஷ ஹேதுவினைக் கூறல்.

**1.** தந்தை தாயுமெய்த் தகவுடை யுறவுஞ் சாலுங் கல்வியுந் தருமுயிர்த் துணையுஞ், சிந்தை யாருநற் சீலமும் வலியுந் திருவு மின்பமுஞ் சிதைவிலா வறிவு, முந்தை யாமுளத் துவகையு முயிரு மூல முத்தியு மொழிவருஞ் சமைவு, மெந்தை யாகிவந் தேழையே னையுமா ளிறைவ னார்கழ லாதுமென் றனக்கே.

(இ—ள்) எந்தை ஆகி - எம்முடைய (ஞான) பிதா வாகி, வந்து - (கருணையினால் எழுந்தருளி) வந்து, ஏழையேனையும் - (ஞானம் இல்லாத) எளியவனாகிய என்னையும், ஆள் - (தடுத்து) ஆட்கொண்ட, இறைவனார் - (பரஞான) ஆசாரியரது, கழல் - திருவடி (த் தாமரை)யே, என் தனக்கு - எனக்கு, தந்தை - தந்தையும், தாயும் - மாதாவும், மெய் - யதார்த்தமான, தகவு உடை - தகுதி உடைய, உறவும் - சுற்றத்தார்களும், சாலும் - உயர்ந்த, கல்வியும் - வித்தையும், தரும் - தருகின்ற, உயிர் - ஜீவனுக்கு, துணையும் - ஆதாரமும், சிந்தை - மனத்தின் கண், ஆரும் - பொருந்தியிருக்கின்ற, நல் - உயர்ந்த, சீலமும் - ஒழுக்கமும், வலியும் - சாமர்த்தியமும், திருவும் - ஐசுவரியமும், இன்பமும் - ஆனந்தமும், சிதைவு இலா - கெடாத, அறிவும் - ஞானமும், உளத்து - மனத்தின்கண், முந்தை ஆம் - முதன்மையான, உவகையும் - சந்தோஷமும், உயிரும் - பிராணனும், மூலம் - காரணமான, முத்தியும் - மோக்ஷமும், மொழிவு - கூறற்கு, அரும் - அரிய, சமைவும் - பொறுமையும், ஆகும் - (ஆகிய பதினைந்தும்) ஆம். (எ—று.)

(இ—ம்.) தந்தை தாய் [illegible] ஏழையேனையும் - உம் - இழிவு சிறப்பு. இதனால் [illegible] பக்குவிகளையுங் குறித்தவா [illegible] பொருளை.

சற்று ஏகாரத்தைக் கழுவோடு பிரித்துக் கூட்டிப், பிரி நிலை, அல்லது, தோற்றமாகக் கொள்க. எம்—தந்தை—'எந்தை' என மரீஇயிற்று. 'பண்டு—காலம்—பண்டைக் காலம்' என்றாற் போல, 'முந்து' என்பது, 'முந்தை' என ஐ காரச் சாரியை பெற்றது. 'குழல்' என்னும் எழுவாய், ஆகும் என்னும் பய னிலை கொண்டது. 'என் றனக்கு' என்பதில், தன் சாரியை.

## பாடு துறை.

2\. தந்தைதா யாவானுஞ் சார்கதியிங் காவானு,
மந்தமிலா வின்பமக் காவானு - மெந்தமுயிர்,
தானத வானுஞ் சரணாக வானுமருட்,
கோனாக வானுங் குரு.

(இ—ள்.) இங்கு - இவ் வுலகத்தின்கண், நமக்கு - எமக்கு, குரு - (ஞான) ஆசாரியரே, தந்தை - பிதாவும், தாய் - மாதா வும், ஆவானும் - ஆகுபவனும், சார் - அடையும்படியான, கதி - ஐசுவரியம், ஆவானும் - ஆக உள்ளவனும், அந்தம் இலா - நாசம் அற்ற, இன்பம் - ஆனந்தம், ஆவானும் - ஆகுபவனும், எம் - எமது, உயிர் - பிராணன், ஆகுவானும் - ஆகுபவனும், சரண் - அடைக்கலம், ஆகுவானும் - ஆகுபவனும், அருள் - அநுக்கிரகஞ் செய்கின்ற, கோன் - இறைவன், ஆகுவானும் - ஆகுபவனும், ஆவர். (எ—று)

(இ—பு:) உம்மைகள் அனைத்தும் எண்ணுப் பொருளன. எந் தமுயிர் தான்—தம் - தான் இரண்டும் சாரியைகள். 'குரு' என்னும் எழுவாய்க்கு, 'ஆவர்' என்னும் பய னிலை, அவாய் நிலை யால் வருவிக்கப் பெற்றது.

## மெய்ம் மொழி.

3\. முத்திசித் திக்கு மேது மொழிவர்கள் சிலர்வேவ் வேறே,
சித்தமற் றுலா மென்றுந் தீவினை சிதைந்தா லென்று,

மொத்தகல் யோகா லென்று முரியஞா னத்தா லென்று
மித்திற மனைத்தா லாகா திறைதிரு வருளா லாமே.

(இ—ள்) முக்தி - மோக்ஷம், சித்திக்கும் - சித்திப்பதற் குரிய, ஏது - ஏதுக்களை, சிலர் - சில பேர், சித்தம் - மனம் அற்றால் - நாச மடையின்; ஆம் - (மோக்ஷ சித்தி) ஆம், என்றும் - எனவும், தீ வினை - பாப கர்மங்கள், சிதைந்தால் (ஆம்) - நாச முற் றால் (மோக்ஷ சித்தி) யாம், என்றும் - எனவும், ஒத்த - சமமான நல் - நல்ல, யோகால் (ஆம்) - யோகாப்பியாசத்தினால் (மோக்ஷ சித்தி) யாம், என்றும் - எனவும், உரிய - (அடைதற்கு) உரித் தாய, ஞானத்தால் (ஆம்) - (குரு கிருபை யின்றிய சாஸ்திர) ஞானத்தினால் (மோக்ஷ சித்தி யாம்), என்றும் - எனவும், வேறு வேறு - வேறு வேறு பிரகாரமாக, மொழிகர்கள் - கூறுவார்கள்; இத் திறம் அனைத்தால் - இவ் வாறுகிய எல்லா உபாயங்களா லும், ஆகாது - (மோக்ஷ சித்தி) ஆகாது, [குரு கிருபையின்றென் றும் எனக் கூறுகிறார்.] இறை - (ஞான) ஆசாரியனது, திரு அருளால் - மகிமை பொருந்திய கிருபை நோக்கால் மாத்திரம், ஆம் - ஆத்ம சாக்ஷாத்கார லாபமாக (மோக்ஷ சித்தி) ஆகும். (எ—று)

(இ—பு:) 'சித்த மற்று ஆம்' என்பதின் முன்ன, 'ஆம்' என்னும் ஆக்கச் சொல், பின் னுள்ளவிடங்களிற் சென்று இயைந்து பொருள் தருதலின் மூல னிலைத் தீபகம். உம்மைகள் நான்கும் எண்ணுப் பொருளன. "வெவ் வேறு", "அருளா லாமே" என்புழி, ஏகாரந் தேற்றம் அசை நிலைகள். 'சிலர்' என்னும் எழுவாய், 'மொழிவர்கள்' என்னும் பயனிலை கொண்டது. 'ஏது' செயப்படு பொருள், 'ஆகாது, ஆம்' என்னும் பய னிலைகட்கு, மோக்ஷ சித்தி எழுவாய்.

மெய்ம் மொழி.

4. எத்துணை மந்தி ரங்கள் யோகங்க ளுபாய மெல்லா,
மெய்ந்ஞான வீட்டைக் காணும் வேதகஞ் செய்ய மாட்டா,

தெஞ்ஞானக் கடைக்கண் வைத்த தேசிகன் சித்த மத்தி,
லஞ்ஞானம் பறிந்த போதே யமுதவீ டதுவுந் தோன்றும்.

(இ-ள்.) எஞ்ஞானம் மந்திரங்கள் - எவ்வாறய (அநாத்ம) ஞானங்களும் மந்திரங்களும், யோகங்கள் - யோகங்களும் (ஆகிய) எல்லா உபாயம் - எல்லா சாதகங்களும், மெய் - உண்மையான, ஞான - (ஆத்ம) ஞானத்திறைல் (அடையத் தக்க), வீட்டை - மோக்ஷத்தினை, காணும் - அடையப்படுயான, வேதகம் - அறிவை, செய்யமாட்டா - உண்டாக்க மாட்டா, [ஞானாசாரியாரது திருவருளே மோக்ஷ சாதகம் எனக் கூறுகிறார்.] தேசிகன் - ஆசாரியன், தெள் (மை) - தெளிந்த, ஞான - ஞானத்தோடு கூடிய, கடைக்கண் - கிருபா வீக்ஷண்யத்தை, வைத்த - சாத்திய, சித்தமத்தில் - (எம்) சித்தத்தில் (உள்ள), அஞ்ஞானம் - அஞ்ஞானமானது, பறிந்த - நீங்கிய, போதே - காலத்திலேயே, அமுதம் - நித்தியமாயுள்ள, வீடதுவும் - மோக்ஷமும், தோன்றும் - உண்டாம். (எ-று)

(இ-பு:) முதல் வரியில் எண் ஜும்மைகள் தொக்கன. எ + ஞானம் = எஞ் ஞானம். தெண்மை + ஞானம் = தெஞ் ஞானம், இது "ஈறுபோதல் இடையுகர மிய்யாதல் ... ... ... ... ... ... ... ...பண்பிற் கியல்பே" என்ற நன் னூல் சூத்திர விதிப்படி, மை கெட்டு, ண், ஞ் ஆகத் திரிந்து, 'ஞானம்' என்பதனோடு சேர்ந்து, தெஞ் ஞானம் என றாயிற்று. சித்தமத்தில் - என்புழி, 'சித்தம் அதில்' என்பது, அத்தில் என விரித்தல் விகாரம் பெற்றது. ஈண்டு, அது பகுதிப் பொருள் விகுதி. போதே - ஏ பிரிநிலை. வீடதுவும் - அது - பகுதிப் பொருள் விகுதி. உம் - இறந்தது தழீஇயது. உபாயம் எல்லாம் - ஈண்டு உபா யம் - பால்பகா அஃறிணைப் பெயர். எல்லாம் - என்னும் எழுவாய், 'செயமாட்டா' என்னும் பய னிலை கொண்டது. வேதகம் - செயப்படு பொருள். 'வீடு' என்னும் எழுவாய், 'தோன்றும்' என்னும் பய னிலை கொண்டது.

## மெய்ம் மொழி.

5. ஆர்த்தது பிறவி யென்று மஞ்ஞான பாச மத்தைக், கூர்த்தமெய்ஞ் ஞான வாளைக் கொண்டுசே திக்க வேண்டு, மேத்திமெய்ஞ் ஞான வானை யேயவ னருட்கண் ணாலே, பார்த்தபின் னில்லாப் பெத்தம் பரிதிமுன் னிருள்போ லன்றே.

(இ-ள்) அஞ்ஞான பாசம் - அஞ்ஞான ரூப பந்தம், என்றும் - எப்பொழுதும், பிறவி - ஜநந (மரண) ங்களில், ஆர்த்தது - (ஜீவனை) பொருந்தி யுள்ளது, அத்தை - அந்த அஞ்ஞான ரூப பாசத்தினை, கூர்த்த - கூர்மையான, மெய் ஞான வாளைக் கொண்டு - தத்துவ ஞான வாளினால், சேதிக்க வேண்டும் - அறுக்க வேண்டும், மெய் ஞானவானையே - (அதன் பொருட்டு) யதார்த்த ஆத்ம ஞானியினையே, ஏத்தி - (உபதேச மொழி மெய்களால்) வழுத்தியதால், அவன் - (மகிழ்வுற்ற) அந்த ஞானி, அருள் கண்ணால் - கிருபா வீக்ஷணத்தால், பார்த்த - கவனித்த, பின் - பின்னர், பரிதி - சூரியனது, முன் - எதிரில், இருள் - அந்தகாரம் (இராத்து), போல் - போல, பெத்தம் - பந்தமானது, இல்லா - இருக்கமாட்டாது. எ-று)

(இ-பு.) 'அது' என்னும் சுட்டுப் பெயர், ஐ உருபு ஏற்கும் போது, 'அத்தை' என விகாரப்பட்டு நின்றது. ஞானவானையே - ஏ - பிரி நிலை. 'ஏத்த' என்னும் செய வென் னெச்சம், காரணப் பொருளில், 'ஏத்தி' எனத் திரிந்து நின்றது. கண்ணாலே - ஏ - அசை நிலை. 'இல்லாது' என்னும் அஃறிணை ஒன்றன்பால் தெரிநிலை வினை முற்று, ஈறு கெட்டு, 'இல்லா' என நின்றது. பரிதி முன் னிருள் போல் - உவமை அலங்காரம். அன்று - ஏ - அசை நிலைகள். பாசம் - எழுவாய், ஆர்த்தது - பய னிலை. 'ஜீவன்' என்னும் செயப்படு பொருள், அவாய் நிலையால்

கூறியிருக்கப்பட்டது. சீடன் - தோன்ரு எழுவாய், சேதிக்க வேண்டும் - பயனிலை. அது - செயப்படு பொருள். பெத்தம் - எழுவாய். நில்லாது - பயனிலை.

## மெய்ம் மொழி.

**6. விடத்திளுன் மூர்ச்சித் தானை விடம்வல்லார் பார்க்கத் தீரு, மடர்த்தல்லா ரெல்லாம் பார்த்து மதுதீரா வாறு போல, விடத்தினை யுடைய ஞாந விறைவனுற் பார்க்கி னல்லாற், சடத்துவ மாயை யாற்சேய் சடக்குடைப் பிறப்ப றாதே.**

(இ-ள்) விடத்திளுல் - தீய பாம்பு தீண்டிய விஷத்திளுல், மூர்ச்சித்தானை - மூர்ச்சை யுற்றிருக்கின்றவனை, விடம் - விஷத்தினை (நிவிர்த்திக்கும்படியான), வல்லார் - சாமர்த்தியம் உடைய வைத்தியர்கள், பார்க்க - ரக்ஷிக்க, தீரும் - (அவ்விடம்) நிவிர்த்தியாகும், அல்லார் - (விஷத்தினை நிவிர்த்திக்கும்படியான சாமர்த்தியம் உடையர்) அல்லாதவர், எல்லாம் - யாவரும், அடர்த்து - நெருங்கி, பார்த்தும் - ஈக்ஷணம் செய்தும், அது - அந்த விஷம், தீரா - நிவிர்த்தியாகாத, ஆறு - முறைமை, போல - போல், இடத்தினை உடைய - விசாலம் பொருந்திய (அகண்ட), ஞாந - ஞாநத்தினை யுடைய, இறைவன் - ஆசாரியன், பார்க்கின் - ஈக்ஷணம் செய்யின், அல்லால் - அன்றி (ஏனையோர் பார்வையால்), சடத்துவ - சடத் தன்மையினை யுடைய, மாயையால் - மாயையினுல், செய் - செய்யப்பட்ட, சடக்கு உடை - துக்கத்தினை யுடைய, பிறப்பு - ஜநநம், அறுது - நீங்காது. (எ-று)

(இ-பு) பார்த்தும் - உம் - இழிவு சிறப்பு. இறைவனுல், ஆல் - அசை நிலை. செய் சடக்கு - வினைத் தொகை. அறுதே - ஏ தற் றசை. 'தீரும்' என்னும் பயனிலைக்குத் தோன்ரு எழுவாயாக, 'விடம்' என்பதைக் கொள்க. 'பிறப்பு' என்னும் எழுவாய்,

'அருளு' என்னும் பயனிலை கொண்டது. இதில் உவமை அணி உளது.

சொரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை. 7—11)

7 சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுநின்,
றிருமையு மநித்தமென் றேதும் விட்டுநற்,
குருவினை வழிபடிற் கோதி லாவவ,
னருளிடு மழிவற நின்ற வப்பொருள்.

(இ-ள்) சுருதியும் - வேதமும், மிருதியும் - ஸ்மிருதியும், சொன்ன - கூறிய, ஆறு - முறையாக, நின்று - (அநேக ஜந்மத்தில் நன்கு சித்தித்த ஸ்ரௌத ஸ்மார்த்த கர்ம தத்பரனாய்ச் சிடன்) இருந்து, இருமையும் - (இக லோக பர லோகங்கள்) இரண்டும், அநித்தம் - அநித்தியம், என்று - என உணர்ந்து, ஏதும் - (ஜகத் பதார்த்தங்களில்) எதனையும், விட்டு - (பற்றாது) விடுத்து (வைராக்கியத்தினை யடைந்து), நல் - (சிவ ஞானத்தினாலே சம்சாரம் நாசமாம்; கர்மத்தால் நாச மாகாது என உணர்ந்து, சிவ ஞானசித்தியின் பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்டனாய) நல்ல, குருவினை - ஆசாரியனை, வழிபடில் - (பிரியத்தோடு) வழிபட்டுவரின், கோது இலா - குற்றம் அற்ற, அவன் - அந்த ஞானாசாரியன், அழிவு அற - நாசம் இன்றி, நின்ற - இருக்கப்பட்ட, அப் பொருள் - அப் பரவித்தையை, அருளிடும் - (அந்த அபர வித்திய விஷய சம்சார பலத்தினின்றும் விரக்தனாய சிடனுக்கு) அநுக்கிரகஞ் செய்வான். (எ-று)

(இ-பு) சுருதியும் - மிருதியும், உம் - இரண்டும் என்னும் பொருளன. இருமையும் - ஏதும், உம் - இரண்டும் முற்றும்மைகள். 'அவன்' என்னும் எழுவாய், 'அருளிடும்' என்னும் பயனிலை கொண்டது. அப் பொருள் - செயப்படு பொருள்.

இது மூலத்தில் 7-வது அத்தியாயத்தில் (20-21-22) மூன்று சுலோகங்களின் பொருளாம்

சொரூபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை.7—39)

8. எண்ணிலாக் கல்வி யாலு மிலங்கிய கேள்வி யாலுந்,
திண்ணிதா மதியி னாலுந் தெளியவா ராது தீர,
நண்ணிய ஞானி தானே நயந்தருள் செய்யில் ஞானக்,
கண்ணினாற் காண லாகுங் கரத்திலா மலகம் போல.

(இ-ள்) எண் இலா - (இந்த ஆத்மா, படிக்கப்படும்) கணக்கற்ற, கல்வியாலும் - வேத சாஸ்திரங்களினாலும், திண்ணிது ஆம் - சூக்ஷ்மார்த்த தாரணஞ் செய்யும் சக்தி யுடைய, மதியினாலும் - புத்தியினாலும், இலங்கிய - (ஞான சாதக மாக) விளங்கிய, கேள்வியாலும் — (அநேக முறை செய்யும்) சிரவணத்தினாலும், தெளிய - அடைய, வாராது - முடியாது, தீரம் - திடம், நண்ணிய - பொருந்திய, ஞானி - வித்வான், நயந்து - விரும்பி, அருள் செய்யில் - (அதனை அறியும் வண்ணம்) கிருபை புரியில், ஞானக் கண்ணினால் - ஞான திருஷ்டியினால் (அந்தக் காரணத்தினால்), கரத்தில் - ஹஸ்தத்தில் (உள்ள), ஆமலகம் - நெல்லிக் கனி, போல - போல், காணல் ஆகும் - (அவ் வாத்மாவைச்) சாக்ஷாத்கரித்தல் உளதாம். (சிரவண மனன நிதித்தியாசனாதிகளால் அதன் அடைவைப் பிரார்த்திக்கும் வித்துவானுக்கு, இந்த ஆத்மா அவித்தையினால் மறைபட்டிருக்கப்பட்ட தனது சரீரத்தினைப் பிரகாசிக்கின்றது). (எ-று)

(இ-பு) 'எண்ணிலா' என்பது, 'எண் ணிலாத' என்பதன் ஈறு கெட்ட எதிர் மறைப் பெய ரெச்சம், உம் - மூன்றும் எண்ணுப் பொருளன. ஞானி தானே - தான் - ஏ - இரண்டும் அசை நிலைகள். 'வாராது' என்னும் பய னிலைக்குத், தோன்றா எழுவாய் ஆத்மா. 'காணல்' என்னும் எழுவாய், 'ஆம்' என்னும் பய னிலை கொண்டது. இதில் உவமை அணி உளது.

இது மூலத்தின் ஏழாவது அத்தியாயத்தில் 86வது சுலோகத்தின் பொருளாம்.

## ஞானாசாரம்.

9. பருவிடங் கடியுண் டானே பாவிப்பான் கருடன் றன்னைப், பெருகிய பித்தன் றானே பிழிந்துமா மருந்து கொள்வா, னிருமையு மறியா மூடர்க் கியலுமோ விறையிற் கூடல், குருபரன் கூட்டிற் கூடுங் கூட்டானேற் கூடா தென்றான்.

(இ-ள்.) பரு - பெரிய, விடம் - விஷத்தினை யுடைய (பாம்பினால்), கடி யுண்டான் - கடிக்கப்பட்டவன், கருடன்றன்னை - கருடனை, பாவிப்பானே - தியானிக்கத் தக்கவனே? (விஷம் தலைக் கேறிய புருஷன் கருடத் தியானம் செய்ய முடியாதவன் என்றபடி), பெருகிய - மிகுந்த, பித்தன் - வைத்தியக்காரன், தான் - தானே, பிழிந்து - (பச்சிலை ரசத்தினை) வடித்து (அவ் வநுபானத்தில்), மா மருந்து - பெரிய மருந்தினை (க் கலந்து), கொள்வான் ஓ - (உட்) கொள்வானோ? (வைத்தியக்காரன் தானே மருந்து சாப்பிட மாட்டான் என்றபடி), இருமையும் - (அது போல இக லோக பர லோக சாதக இருத்தியங்கள்) இரண்டினையும், அறியா - உணராத, மூடர்க்கு - அறிவிலிகட்கு, இறையில் - பரமாத்மாவின், கூடல் - ஐக்கியமாதல், இயலுமோ - கூடுமோ? (இக லோக பர லோக சாதக ஞான மில்லா அறிவிலிகள் அவ் ஐக்கிய நிலையை அடையார் என்றபடி), குருபரன் - (ஞான) ஆசாரியனாகிய இறை, கூட்டில் - சேர்ப்பிக்கில், கூடும் - (அடைதல்) பொருந்தும், கூட்டானேல் - (அந்த ஆசாரியன் அவ் ஐக்கிய நிலையினை) அடைவியா திருப்பாராகில், கூடாது - (அதனை அடைதல்) முடியாது, என்றான் - என (ச் சிவைக்குச் சிவன்) கூறினான். (எ-று)

(இ-பு). ஓகாரம் மூன்றும் எதிர் மறைப் பொருளன. முன் ஓகாரம் இரண்டும், பாவிப்பான், கொள்வான் என்பவற்றோடு

பிரித்துக் கட்டப்பட்டன. குருடன்றன்னை - தன் - சாரியை. இருமையும் உம் - முற்றும்மை. கடி புண்டான் - வினையா லணையும் பெயர். கடி புண்டான் - எழுவாய், பாவிப்பான் - பய னிலை, குருடன் - செயப்படு பொருள். பித்தன் - எழுவாய், கொள்வானோ பய னிலை, மருந்து - செயப்படு பொருள். கூடல் - எழுவாய் இயலாது - பய னிலை. கூடல் - எழுவாய், கூடும் - பய னிலை. கூடல் - எழுவாய், கூடாது - பய னிலை. சிவன் தோன்று எழுவாய், என்றான் - பய னிலை. ஞானாசாரியரின் கிருபை யின்றி யடைய முடியாமை - செயப்படு பொருள். இதில் உவமை அணி உளது.

## ஞானாசாரம்.

**10. கட்டுண்ட கள்வன் றானே கட்டினை விட்டுக் கொள்வான், விட்டவ்வே தனையைத் தீர்த்து விதிப்பவர் வேறே வேண்டு, மட்டமா சித்தி யோகா லறிவினா லறிய லாமோ, தட்டறப் பாசந் தீர்க்கத் தற்பரங் குருவே வேண்டும்.**

(இ-ள்.) கட்டு உண்ட - (பிறரால் கயிறு முதலியவை கொண்டு) கட்டப்பட்ட, கள்வன் - திருடன், தான் - தானே, கட்டினை - அக் கட்டை, விட்டுக் கொள்வானோ - அவிழ்த்துக் கொள்ளத் தக்கவனோ?, விட்டு - (அக் கட்டினை அவிழ்த்து) விட்டு, அவ் வேதனையை. அக் (கட்டால் உளவாம்) துன்பத்தினை, தீர்த்து - நிவர்த்தித்து, விதிப்பவர் - (திருட்டுக்குத் தகுந்த தண்டனையை நிவர்த்தித்துச் சுகியாய் இருப்பாயாக என்று) நியமிப்பவர், வேறு - (அத் திருடனுக்கு) அந்நிய மாக, வேண்டும் - (ஒருவர்) வேண்டும் (அது போல), அட்ட மா சித்தி - அஷ்ட மஹா சித்திகளினாலும், யோகால் - (ஹட யோகம், மந்திர யோகம், லய யோகம், ராஜ யோகம் முதலிய) யோகங்களினாலும், அறிவினால் - (அநாத்ம) ஞானத்தினாலும், அறியல் - (பாச நிவர்த்தியின் உபாயத்தை) உணர்தல், ஆமோ -

கூடுமோ? (சித்தி, போக, அநாத்ம ஞான மாத்திரத்தினால் பாசம் நிவிர்த்தியாகாது என்றபடி), பாசம் - சம்சார பந்தத்தினை, நட்டு அற - தடை யின்றி, நீக்க - (தத்துவ ஞான வாயிலாய்) நிவிர்த்திக்க, தத் பரம் - அந்த மேலான, குருவே - ஆசாரியரே, வேண்டும் - வேண்டும்.

(எ-று)

(இ-பு.) 'கள்வன் தானோ'- என்பதி லுள்ள ஓகாரம், 'கொள்வானோ' எனக், 'கொள்வன்' என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. ஓ காரம் இரண்டும் எதிர் மறை. வேதோ - ஏ - அசை நிலை. குருவே - ஏ - பிரி நிலை. விதிப்பவர் - வினையா லணையும் பெயர். சித்தி போக வறிவினால் - என்புழி எண் ணும்மைகள் தொக்கன. கள்வன் - எழுவாய், விட்டுக் கொள்வான் - பய னிலை, கட்டு - செயப்படு பொருள். விதிப்பவர் - எழுவாய், வேண்டும் - பய னிலை. அறிவன் - எழுவாய், ஆமோ - பய னிலை. குரு - எழுவாய், வேண்டும் - பய னிலை.

### திரு மந்திரம் 9—2840

11. உருவன்றி யேநின்ற ருவம்பு ணர்க்குந்,
கருவன்றி யேநின்று தான்கரு வாகு,
மருவன்றி யேநின்ற மாயப்பி ரானைக்,
குருவன்றி யாவர்க்குங் கூடலொண் ணாதே.

(இ-ள்.) உரு அன்றியே - அருவனாய், நின்று - இருந்து, உருவம் - உருவத்தினை, புணர்க்கும் - (ஈசன்) தரிப்பன், கரு அன்றியே - (தனக்கு) ஒரு காரணம் உடைய னல்லனாய், நின்று - இருந்து, தான் கரு ஆகும் - தான் (யாவற்றிற்கும்) காரணமானவன், மரு அன்றியே - (அங்ஙனம் இருந்தும்) நிர்த்தோஷனாய், நின்ற - இருக்கின்ற, மாய - மாயைக்கு அதிஷ்டான மாகிய, பிரானை - பரமசிவத்தினை, குரு அன்றி - குரு வருளா லன்றி (வேறு விதத்தால்), யாவர்க்கும் - எவ் வகைப்பட்டவர்களுக்கும், கூடல் - அடைதல், ஒன்றாது - முடியாது.

(எ-று.)

(இ-பு.) உரு, கரு, மறு, குரு - நான்கும் விடாத ஆகு பெய ராய், உருவினன், கருவினன், மறுவினன், குரு வருள், என்னும் அர்த்தம் தந்தன. 'மறு' என்பது, எதுகை நோக்கி மரு - என நின்றது. ஏகாரம் மூன்றும் தேற்றம். 'நின்ற' என்னும் பெய ரெச்சம், பிரான் - என்னும் பெயர் கொண்டது. ஒன்றுதே - ஏ. கற் றசை. 'புணர்க்கும்' என்னும் பிற வினை, ஈண்டுத் தன் வினைப் பொருள் தந்து நின்றது. மாயா+பிரான் = மாயப் பிரான் என நிலை மொழி யீறு, விகாரப்பட்டுப் புணர்ந்தது. 'மாயப் பிரான்' - என்பது, மாயைக்கு அதிஷ்டான மாகிய பிரான் என, ஏழ்ச்சு ஙருபும், பயனும் உடன் தொக்க தொகை. யாவர்க்கும்- உம் - முற் றும்மை. 'ஈசன்' என்னும் தோன்று எழுவாய், 'புணர்க்கும்', 'ஆகும்' என்னும் பய னிலைகள் கொண்டது. 'கூடல்' என்னும் எழுவாய், 'ஒன்றுது' என்னும் பய னிலை கொண்டது.

## மோக்ஷ சாதகத்தினைக் கூறல்.

### போத ரத்நாகரம்.

12. தேசிகன் பதநற் சேவையின் வலியுந் திகழ்பதத் தளவிலா வன்பு, மாசினன் முத்தி யதில்விருப் பதுவு மமலவா ரணத்தினில் விருப்பு, நாசமா மிந்த வுடலினில் வெறுப்பு நசையற விடயத்தி லுவர்ப்பு, மீசனேப் பொருளு மென்னுநற் றணிவு மிவையெழின் முத்திசா தநமே.

(இ-ள்.) தேசிகன் - ஆசாரியரது, பதம் - திரு அடி (க்குச் செய்யும்), நல் - நல்ல, சேவையின் - சிசுருஷையினது, வலியும்- சாமர்த்தியமும், திகழ் - விளங்காநின்ற, பதத்து - (ஆசாரியரது) திரு அடியில், அளவு இலா - எல்லை யின்றிய, அன்பும் - பக்தியும், ஆசு இல் - குற்றம் அற்ற, நல் - உயர்ந்த, முத்தியதில் - மோக்ஷத் தில், விருப்பதுவும் - விருப்பமும், அமல் - நின்மலமான, ஆரணத்

தினில் - வேதத்தில், விருப்பும் - விருப்பமும், ரசம் ஆம் - ருசிக்கும்படியான, இந்த உடலினில் - இந்தச் சரீரத்தில், வெறுப்பும் - வெறுப்பும், விடயத்தில் - விஷயங்களிடத்தில், நசை அற - விருப்பம் நீங்கும்படியாக, உவர்ப்பும் - அருவருப்பும், எப் பொருளும் - எவ் வகைப்பட்ட வஸ்துக்களும், ஈசன் - ஈசஸ்வரூபமாம், என்னும் - என்கின்ற, நல் - நல்ல, துணிவும் - நிச்சயமும், இவை - (ஆகிய ஏழு விதமாய) இவைகள், எழில் - சிறப்பினை யுடைய முத்தி - மோக்ஷத்திற்கு, சாதகமே - சாதனமாம். (எ-று)

(இ-பு.) சேனையின் வலி - ஆறாம் வேற்றுமைத் தொகை. இன் - சாரியை. உம் - எச்சம், எப் பொருளும், என்பதி லுள்ள உம் - முற்றும்மை. ஏனைய எழும் என்னும் பொருளன. பதத்து - அத்து - சாரியை. முத்தியதில் - விருப்பதுவும்—அது - இரண்டு பகுதிப் பொருள் விகுதிகள். ஆரணத்தினில் - அத்து - இன் - இரண்டும் சாரியைகள். உடலினில் - இன் சாரியை. சாதகமே ஏ - ஈற் றசை. 'இவ்வை' என்னும் எழுவாய், 'சாதகம்' என்னும் பெயர்ப் பய னிலை கொண்டது.

### போதாமிர்தம்.

**13. திகழுநற் குரவன் திருவுளம் பார்த்துச் செய்யுமே வற்சிறப் பதுவு, மகிழுநற் குரவன் மருவுநற் பதியே மன்னிநீங் காதவா தனையும், புகழுநற் றமரும் பொன் முதற் பொருளும் பொருந்தநோ யனைமதித் திடலும், தகவுடைச் சமைவுஞ் சாந்தியு முத்தி சாதக மென்பர்தக் கோரே.**

(இ-ள்.) திகழும் - ('ஈசா ரூபமாக') விளங்காநின்ற, நல் - மேன்மை யுடைய, குரவன் - ஆசாரியரது, திரு உளம் - சிறிய கருத்தினை, பார்த்து - உணர்ந்து, செய்யும் - இயற்றுகின்ற, வல்

தக வாதி பணிவிடையின், சிறப்பதுவும் - பெருமையும், மகிழும் - சந்தோஷிக்கும், நல் - நல்ல, குரவன் - ஆசாரியர், மருவும் - பொருந்தி யிருக்கின்ற, நல் - சிறந்த, பதி - மனை, மன்னி - (அடைந்து) நிலைத் திருந்து, நீங்காத - (விட்டுப்) போகாத, வாதனையும - சஞ்சாரமும், புகழும் - (பிறர்) துதிக்கின்ற, நல் - மிகுதியான, சுற்றும் - சுற்றமும், பொன் முதல் - ஸ்வர்ணாதி, பொருளும் - வஸ்துக்களும், பொருந்து - சம்பத்தியாகின்ற, கோய் - அன்ப(முதலானோ)ம், என - என்று, மதித்திடலும் - கருதுதலும், தகவு உடை - தகுதியான, சமைவும் - பொறுமையும், சாந்தியும் - (சித்த) அமைதியும் (ஆகிய இவ் வைந்தினையும்), தக்கோர் - பெரியோர், முத்தி - மோக்ஷத்திற்கு (முக்கிய வாயிலாக), சாதகம் - சாதகமாம், என்பர் - என்று கூறுவர். (எ-று)

(இ-பு.) உம் - எழும் எண்ணுப் பொருளன. சிறப்பதுவும் - அது பகுதிப் பொருள் விகுதி. பதியே - ஏ - அசை நிலை. கோய்க்கு ஏதுவானவற்றை, கோய் என உபசரித்துக் கூறினர். தக்கோரே - ஏ - ஈற் றசை. தக்கோர் - எழுவாய், என்பர் - பய னிலை. மேற் கூறிய சிறப்பதுவும், முதலிய ஐந்தும் செயப்படு பொருள்.

## போதாமிர்தம்.

14. முடிகவித் துலகா டிருவிகழ்க் திறைவன் மோய் கழல் சூடேற் றிருவும், படிதனக் கேவல் செய்பத மிகழ்ந்து பரமனுக் கேவல்செய் பதமு, மடையுநற் சுவைக ளனைத்தையு மிகழ்ந்திங் கமலனற் சேடமா குதலு, மிடையறத் திகழு முத்திசா தநமென் றிசைத்திடு மேலை யிவா ரணமே.

(இ-ள்.) முடி - (நவ ரத்ந கசிதமான) கிரீடத்தினை, கவித்து - தாரணை செய்து (தரித்துக்) கொண்டு, உலகு , (ஐம் பத் தாறு

கோடி பூமண்டலத்தினையும், ஆள் - ஆட்சி செய்யும்படியான, திரு - ஐசுவரியங்கள் அனைத்தையும், இகழ்ந்து - (நசுவரம் என) நிந்தித்து (விட்டு), இறைவன் - பரமேசுவரனது, மொய் - (வனப்பு) நெருங்கிய, கழல் - (வீர கண்டை அணிந்த திரு) அடி (த் தாமரை) யினை, சூடும் - (சிரசில்) தரித்துக்கொள்ளும்படியான, நல் - மேம்பட்ட, திருவும் - ஐசுவரியப் பிராப்தியும், படிதனக்கு - பூலோகத்தில் உள்ள மனிதர்கட்கு, ஏவல் - அடிமைத் தொழில், செய் - செய்கின்ற, பதம் - பதவியினை, இகழ்ந்து - (துச்சம் என) நிந்தித்து (விட்டு), பரமனுக்கு - பரமேசுவரனுக்கு, ஏவல் - ஏவலாதி பணிவிடைகளை, செய் - செய்கின்ற, பதமும் - பதவியும், அடையும் - (கருமாதீனமாக வந்து) பொருந்துகின்ற, நல் - சிறந்த, சுவைகள் - அறுசுவை முதலிய பதார்த்தங்கள், அனைத்தையும் - யாவற்றையும், இகழ்ந்து - (தோஷமுடைய வென உணர்ந்து) நிந்தித்து (விட்டு), இங்கு - இவ்விடத்து, அமலன் - நின்மலனான ஆசாரியனது, நல் - பெருமை மிக்க, சேடம் - உச்சிஷ்டத்தினை, அருந்தலும் - அருந்துதலும் (ஆகிய இம் மூன்றினையும்), இவை அற - சதா காலமும், திகழும் - விளங்குகின்ற, முத்தி - மோக்ஷத்திற்கு, சாதனம் - சாதகமாம், என்று - என, எலை இல் - (பெருமையில்) அளவற்ற, ஆரணம் - வேதம், இசைத்திடும் - கூறுகின்றும். (எ-று)

(இ-பு.) உம் நான்கின், அனைத்தையும் - என்புழி உள்ள உம் - முற்றும்மை. ஏனைய மூன்றும்மைகளும் எண்ணும் பொருளன. படிதனக்கு - தன் - அ - சாரியைகள். படி - ஈண்டு இடவாகு பெயராய், இடத்தி லுள்ளோரை உணர்த்தி நிற்றது. எல்லை என்பது, எலை - என இடைக் குறைந்து நின்றது. ஆரணமே - ஏ - ஈற்றசை. 'திகழும்' என்னும் பெயரெச்சம், 'சாதனம்' என்னும் பெயர் கொண்டது. ஆரணம் — எழுவாய், இசைத்திடும் - பயனிலை. திருவும் - என்பது முதலிய மூன்றும் செயப்படு பொருள் அம் மூன்றன்கண்ணும் இரண்டனுருபு தொக்கு நின்றது.

## மூல சித்தி.

15. துரிசினற் பாரம் பரியமா முறையிற் றகளற வழுவிலாத் துணிவும், பரிவுறக் குரவன் பாதமே நோக்கிப் பழுதறப் புகழுபண் பதுவு, மரியநற் குரவ னருளறம் பொருளோ டின்பம்வீ டென்றுமாண் மையதுந், தெரிவுறத் திகழு முத்திசா தகமாய்ச் செப்புவர் தெய்வஞா னிகளே.

(இ-ள்.) துரிசு இல் - குற்றம் அற்ற, நல் - நல்ல, பாரம்பரியம் ஆம் - (குரு) பாரம்பரையில் வந்ததாகிய, முறையில் - (முத்தி சாதன) க்ரமத்தில், அகள் அற - (சந்தேக விபரீதாதி) குற்றம் அற (உண்டாம்), வழுவு இலா - நழுவுதல் இல்லாத (திடமான), துணிவும் - நம்பிக்கையும், பரிவு உற - அன்பு பொருந்த, குரவன் - ஆசாரியரது, பாதமே - திரு அடிகளையே, நோக்கி - ஸ்மரித்து, பழுது அற - (மூக ஸ்துதி யாதி) குற்றம் நீங்கும்படியாக, புகழு - துதிக்கின்ற, பண்பதுவும் - தன்மையும், அரிய - (கிடைத்தற்கு) அருமையான, நல் - உத்தமமான, குரவன் - ஆசாரியரது, அருள் - காருண்யமே, அறம் - தர்மம், பொருள் - அர்த்தம், இன்பம் - காமம், வீடு - மோக்ஷம் (ஆகிய நான்கு மாம்), என்னும் - எனக் கருதும், ஆண்மையதும் - திறனும் (ஆகிய மூன்றினையும்), திகழும் - விளங்குகின்ற, முத்தி - மோக்ஷத்திற்கு, சாதகம் ஆய் - (ஞான வாயிலாய்ச்) சாதகமாக, தெரிவு உற - (அதிகாரிகள் யாவரும்) அறிந்து கொள்ளும்படி, தெய்வ - தேவத் தன்மையினை உடைய, ஞானிகள் - பெரியோர்கள், செப்புவர் - கூறுவார்கள். (எ-று)

(இ-பு.) அக ளற 'அற' என்னும் வினையெச்சம் அவாய் நிலையால், 'பெற்ற உண்டாம்' என்னும் பெயரெச்சங் கொண்டது. அப் பெயரெச்சம், 'துணிவு' என்னும் பெயர் கொண்டது. வழு, 'வழுவுதல்' என்பதன், தல் - விகுதியும், உகரச் சாரியையும், குறைந்த முதனிலைத் தொழிற் பெயர். உம் - மூன்றும் எண்ணுப் பொருளன. அந்த உம்மைகளுக்கு முன்னே இரண்ட

உருபு தொக்கு நின்றது. பாதமே - ஏ - பிரிநிலை. பண்பதுவும் - அது - பகுதிப் பொருள் விகுதி. பொருளோடு - ஓடு - என்னும் பொருளது. அந்த ஓடு இடைநிலைத் தீபகமாய், 'அருள்' முதலிய ஏனைப் பெயர்களோடும் சென்றியையும். ஆண்மையதும் - அது - பகுதிப் பொருள் விகுதி. ஞானிகளே - ஏ. ஈற்றசை. ஞானிகள் - எழுவாய், செப்புவர் - பயனிலை. தணிவும் - என்பது முதலிய மூன்றும் செயப்படுபொருள்.

## சோருபாநந்த சித்தி (பிரஹ்ம கீதை 12—16)

**16. நேச நெஞ்சினற் றனக்கது நினைவல வாயினு நெறியென்றே, தேசி கன்றிரு வுள்ளமே செய்குவான் செனித்திடுங் குலத்துக்கு, மாச தாகினு மாச்சிர மத்திலே வழுவினு முலகெல்லா, மேசி விடினு மறம்புகழ் தநம்பிற விழப்பினு மிடரேனும்.**

(இ-ள்.) தனக்கு - (சன் மார்க்கனானவன்) தனக்கு, அது - ஆசாரியர் கூறியது, நினைவு அல ஆயினும் - தன் கருத்திற்கு ஏற்ற தன்றாயினும், செனித்திடும் - (தான்) பிறந்திருக்கும், குலத்துக்கு - ஜாதிக்கு, மாசது ஆகினும் - (அதனால்) குற்றம் உண்டாயினும், ஆச்சிரமத்திலே - (தனது) ஆசிரமத்தில், வழுவினும் - வழுவ நேரினும், உலகு எல்லாம் - லோகத்தார் எல்லாரும், ஏசி விடினும் - நிந்தித்து(த் தன்னை ஈசி) விடினும், அறம் - தர்மமும், புகழ் - கீர்த்தியும், தநம் - தனமும் (ஆகிய இவற்றோடு), பிற - (இன்னும்) ஏனையவற்றையும், இழப்பினும் - இழந்து விடினும், இடரேனும் - (பிற) துன்பங்கள் (கஷ்டங்கள்) வரினும் (அவற்றினைப் பொருட்படாது), நெறி - (அதுவே) நன் மார்க்கம், என்று - எனக் கருதி, நேச - (குருவின் இஷ்டத்தினைச் செய்பவன் மேலான போகத்தினை அடைகின்றான் என உணர்ந்து) விருப்பத்தோடு கூடிய, நெஞ்சினன் - மனத்தினன், தேசிகன் - ஆசாரியனது, திரு உள்ளமே - திருக் கருத்தின்படியே, செய்குவான் - செய்து முடிப்பான். (எ-று)

(இ-ப.) நினைவு - என்பதன் ஈற்றில், நான்க னுருபு தொக்கது. அவ - ஒருமையிற் பன்மை மயக்கம். உம் - எழும் இழிவு சிறப்பு. என்றே - ஏ - தேற்றம். உன்னமே - ஏ - பிரி நிலை. செய்குவான் - கு - சாரியை. செகித்திடும் - இறப்பில் எதிர்வு வந்தமை கால வழுவமைதி. இடு - பகுதிப் பொருள் விகுதி. மாசது - அது - பகுதிப் பொருள் விகுதி. ஆச்சிரமத்திலே - அத்து சாரியை - ஏ - அசை நிலை. அறம், புகழ், தகம், பிற- என்புழி எண் ணும்மைகள் தொக்கன. மாணுக்கன் - தோன்றா எழுவாய், செய்குவான் - பய னிலை. உன்னம் - செயப்படு பொருள். 'விடினும்' வீடினும் என, நின்

இதை மூலத்தில், 12வது அத்தியாயத்தில், 30–31–32–33 வது நான்கு சுலோக அர்த்தமும், இச் செய்யுளில் அடங்கி யிருக்கிறது.

## போத ரத்நாகரம்

17. என்ற னக்கிது வாய்த்தவா றறிகிலே னெம்பிரான் கழற்கேவ, றன்ற னக்குநா ணரிது தருவதோ தமியனேற் கேன்றேன்று, சென்று றப்பெரு மார்வமு மச்சமுஞ் சேரிதா வடிமைக்க, னின்றி யற்றுவ தேவலி னியல்பென நீகேழ்மறை சோலுமைந்தா.

(இ-ள்.) மைந்தா - குழந்தாய்!, எம் - என் னுடைய, பிரான்- (தலைவ ராகிய) ஆசாரியாது, கழற்கு - திரு அடிகளுக்கு, ஏவல் தன் தனக்கு - (செய்யும் ஏவ லாதி) பணிவிடைகளுக்கு, நான் - யான், ஆர் – யார்?, தமியனேற்கு - (தகுதி யற்ற) எளியேனுக்கு, இது - இக் (குரு) கைங்கர்யம், தருவதோ - தகுதியாமோ?, என் தனக்கு - அடியேனுக்கு, இது - இக் (குரு) பணிவிடை, வாய்த்த - கிடைத்த, ஆறு - வழி, அறிகிலேன் - (என்ன பாக்கியத்தாலோ?) உணர்ந்தி லேன், என்று என்று - எனக் கருதி, உற - (வணக்கம்) பொருந்த,

சென்று - போய், பெரும் - மிகுந்த, அச்சமும் ஆர்வமும் - பயமும் பக்தியும், செறி தர - பொருந்தும்படி, அடிமைக்கண் - அடிமைத் தானத்தில், நின்று - இருந்து, இயற்றுவது - 'அவர் எண்ணப்படி' செய்வது, ஏவலின் - ஏவலாதி பணிவிடையின், இயல்பு — தன்மை, என - என்று, திகழ் - விளங்காநின்ற, மறை - வேதம், சொலும் - கூறும்.

(எ-று.)

(இ-ள்.) என் றனக்கு - தன் - அ - இரண்டும் சாரியைகள். எம்பிரான் - எம் - ஒருமைப் பன்மை மயக்கம். ஏவல் தன் றனக்கு - தன் - தன் அ - மூன்றும் சாரியைகள். ஆர் - யார் என்னும் வினா வினைக் குறிப்பின் திரிபு, அது தன்மை விட்டு வந்தமை புதியன புகுதல். தருவதோ - ஓ - எதிர் மறை. ஏவல் - இது ஆதியாதி வினைப் பணிகளுக்கு உபலக்கணம். ஆர்வமும், அச்சமும், உம் - இரண்டும் எண்ணும் பொருளன. இயற்றுவது தொழிற் பெயர். நான் - தோன்றா எழுவாய், அறிகிலேன் - பயனிலை. அது - செயப்படு பொருள். நான் - எழுவாய், ஆர் - பயனிலை. மறை - எழுவாய், சொலும் - பயனிலை, இயற்றுவது - செயப்படு பொருள்.

18. சிறப்பெறு நீரா டாமுன்னீ ராட னின்றிட
விருத்தல்தான் கிடத்த லுறங்குமுன் னுறங்க லுண்ணுமுன்
னுண்ட லுரையென வுரையாட லுரைத்த லறம்புரி
யவர்க்குங் கூறுத லருளா ததுசெய்த லருளிய பணியை,
மறந்தன னென்றல் தருவவாற் றெய்வ மதித்தல்செய்
பவன்மக னல்லன்.

(இ-ள்.) சிறப்பு - தூய்மை யாதி குண[ம்] பெற - பொருந்த, நீர் - (நதி யாதி) ஜலத்தில், ஆடா முன் - (குரு) ஸ்நாநம் செய்வதற்கு முன்னர், நீர் - (தான் அந் நதி யாதி) ஜலத்தில்), ஆடல் - ஸ்நாநம் செய்தலும், நின்றிட - (ஆசாரியர்) நிற்க, தான் - தான், இருத்தல் - உட்கார்ந்திருத்தலும், கிடத்தல் - படுத்துக்கொள்ளு

தலும், உறங்கு முன் - (குரு) நித்திரை செய்வதற்கு முன்னர், உறங்கல் - (தான்) நித்திரை செய்தலும், உண்ணு முன் - (குரு) போஜனம் செய்வதற்கு முன்னர், உண்டல்-'தான்' போஜனஞ் செய்தலும், உரை என - சொல் என்று, உரையாமல் - (குரு) சொல்லாதிருக்க, உரைத்தல் - (தான்) சொல்லுதலும். அறம் - (குருவின் பேரில்) வசை கவியினையும் (அறம் பாடல்), பழி - நிந்தையினையும், எவர்க்கும் - (உலகத்தி லுள்ள) யார்க்கும், கூறுதல் - சொல்லுதலும், அருளாதது - (குரு) ஆக்ஞாபிக்காதவற்றை, செய்தல் - செய்தலும், அருளிய - 'குரு' ஆக்ஞாபித்த, பணியை - கைங்கர்யங்களை, மறந்தனன் - மறந்துவிட்டேன், என்றல் - எனக் கூறுதலும், குரு அலால் - குருவே அல்லாமல், தெய்வம் - கடவுள், மதித்தல் -(வேறு உண் டெனக்) கருதுதலும், செய்பவன் - (ஆகிய இப் பத்தினையும்) இயற்றுபவன், மகன் - (அவன்) மாணாக்கன், அல்லன் - ஆகான்.

(இ-ம.) நீராடல் ஆதி தொழிற் பெயர்கள் பத்தின் இறுதியிலும் எண் ணும்மைகள் தொக்கன. அருளாதது - வினையா லணையும் பெயர். செய்பவன் - வினையா லணையும் பெயர். செய்பவன் - எழுவாய், அல்லன் - பயனிலை.

## போதாமிர்தம்

19. அருளறமங் கறைந்திடுதே லறமலா துரைத்த
லறைபொழுதி லிடையுரைத்த லகங்கரித்தங் குரைத்தல்,
பொருளழிவு தானுரைத்தல் பொருளல்லா துரைத்தல்
புன்கோட்டி கொண்டுரைத்தல் பொடிவனவங் குரைத்தல்,
விருளுறுமச் செவிசொல்ல லேவலிசைத் திடுதே லிடமறியா
திறையருளிச் செயவுரைத்தல் வினவல், தெருளுறுநற்
குருகீர்த்தி யல்லதுபா டிடுதேல் தேசிகன்றன் சந்நிதியிற்
றீரவிடு மிவையே.

(இ-ள்.) அங்கு - குரு சந்நிதியில் (அவர் உத்தரவின்றி) அருள் - (ஜீவ) காருண்யத்தினையும், அறம் - தர்மத்தினையும், அறைந்திடுதல் - கூறுதலும், அறம் அலாத - தர்மம் அல்லாதவற்றை, உரைத்தல் - கூறுதலும், அறை பொழுதில் - (குரு) உபதேசிக்குங் காலத்தில், இடை - மத்தியில், உரைத்தல் - கூறுதலும், அகங்கரித்து - (தன்னைப் பெரியவனாகக் கருதிக்) கொள்வித்து, உரைத்தல் - கூறுதலும், பொருள் அறிவு - அர்த்த ஞானத்தினை, உரைத்தல் - (குருவுக்கு) கூறுதலும், பொருள் அல்லாத - அர்த்தம் உடையன வல்லாத வாக்கியங்களை, உரைத்தல் - (குரு சந்நிதியில்) கூறுதலும், புன் - இழிவான, கோட்டி கொண்டு - பரிகாசங் கொண்டு, உரைத்தல் - கூறுதலும், பொடிவன - நிலையில்லாத வார்த்தைகளை, உரைத்தல் - கூறுதலும், இருள் உறும் - மயக்கம் பொருந்திய (வார்த்தைகளை), அச்செவி - குரு காதில், சொல்லல் - கூறுதலும், ஏவல் - (குருவினைக்) கைங்கர்யம் செய்யும்படி, இசைத்திடுதல் - கூறுதலும், இடம் - (தக்க சமய) இடங்களை, அறியாது - தெரியாது, இறை - குருவை, அருளிச் செய - அநுக்கிரகம் செய்யும்படி, உரைத்தல் - கூறுதலும், வினவல், (சந்தேகத்தைக்) கேட்டலும், தெருள் உறு - ஞானத்தினை யுடைய, நல் - உத்தம, குரு - ஆசாரியரது, கீர்த்தி - புகழ், அல்லது - அல்லாததை, பாடிடுதல் - கீர்த்தித்தலும் இவை - (ஆகிய) இப் பதின் மூன்றையும், தேசிகன் - ஆசாரியரது, சந்நிதியில் - சந்நிதானத்தில், நீர - அத்தியந்தம், விடும் - (சற்சீடன்) விட்டொழிப்பான். (எ-று)

(இ-பு.) 'அறம் அல்லாத+உரைத்தல்—' என நிற்கவேண்டியது, இடைக் குறைந்த 'அலாத' என்னும் அஃறிணைப் பலவின் பாற் படர்க்கைக் குறிப்பு வினையா லணையும் பெயரின் ஈற்று அகரம் குறைந்து, 'அல்ல துரைத்தல்' - என நின்றது. 'பொருளல்ல துரைத்தல்' என்புழியும், மேற் குறித்த வாறே கொள்க, அறிவு தான் - தான் அசை நிலை. 'அகங்கரித் தங்கு' 'பொடிவன வங்கு' என்புழி, அங்கு - இரண்டும் அசை நிலைகள். 'இருளுறு மச் செவி' என்புழி, "இருளுறும் வார்த்தைகள் அச்செவி" - என, வார்த்தை

-ன் என்னும் சொல், இடையில் சொல் லெச்சத்தால் வருவிக்கப் பட்டது. செவி சொல்லல் - ஏழாம் வேற்றுமைத் தொகை. இசைத்திடுதல் - இடு - பகுதிப் பொருள் விகுதி. 'அல்லது பாடிடு தல்' என்புழி, 'அல்லது' என்பது குறிப்பு வினையா லணையும் பெயர். தேசிகன் றன் - தன் - சாரியை, இவையே - ஏ - ஈற் றசை. ஈற் சீடன் - தோன்று எழுவாய். விடும் - பய னிலை, இவை - செயப் படு பொருள்.

## போதாமிர்த

20. வெஞ்சொலுங் கடுஞ்சொலும் விரைந்த சொல்லதும
வஞ்சமும் பழுதுடன் மாறு கூறலும்,
பஞ்சிடு முலகியல் பயனில் வாசகந்,
தஞ்சநா யகன்றன்முன் தவிர வேண்டுமால்.

(இ-ள்) வெம் - கோப மான, சொலும் - வார்த்தையும், கடும் - கடுமை யான, சொலும் - வார்த்தையும், விரைந்த - விரை வான, சொல்லதும் - வார்த்தையும், வஞ்சமும் - வஞ்சக வார்த்தையும், பழுது - குற்ற வார்த்தையும், மாறு - விரோத வார்த்தையும், கூற லும் - (ஆகிய இந்த ஆறினைச்) சொல்லுதலும், பஞ்சிடும் - துன்பத் தை புண்டுபண்ணும், உலகு - இவ் வுலகத்தின், இயல் (வாசகம்) தன்மையினை (க் குறித்த வார்த்தையும்), பயன் இல் - பிரயோஜநம் இன்றிய, வாசகம் (கூறலும்) - சொல்லும் (ஆகிய இந்த இரண்டி னைச் சொல்லுதலும்), தஞ்சம் - சரணகதி யாக உள்ள, நாயகன் - ஆசாரியரது, முன் - சந்நிதியில், தவிர வேண்டும் - (அத்தியந்தம் செய்யாதிருக்கும்படி நன் மாணாக்கன்) நீக்கிக் கொள்ளவேண்டும். ()

(இ-பு.) உம் - ஐந்தும் எண்ணுப் பொருளன. சொல்லதும் - அது - பகுதிப் பொருள் விகுதி, வஞ்சம் - பழுது - மாறு - என்னும் பண்புப் பெயர்கள், அப் பண்பை உணர்த்தும் சொற்களை ஆகு பெயரால் உணர்த்தின. பஞ்சி - இடும் - என நிற்க வேண்டிய விடத்து, பஞ்சி - என்பதன் ஈற்று இகரம் குறைந்து, பஞ்சிடும்

என நின்றது. பஞ்சி = வருத்தம், அல்லது, துன்பம். வாசகம் - என்பதனை, உலகியல் - என்பதனோடும் ஒட்டிப் பொருள் கொள்க. கூறலும் - என்பதனை, வாசகம் - என்பதனோடும் இணைக்க. நாயகன் றன் - தன் - சாரியை. உடன் - ஆல் - அசை நிலைகள். நன் மாணாக்கன் - தோன்றா எழுவாய், தவிர வேண்டும் - பய னிலை. கூறல் - செயப்படு பொருள்.

## போத சித்தி

21. ஆசனஞ் சயனம் வாகன மிதியடி யத்திரங்
குடையொடா பரண, மீதுவண் டயிலங் குளியொடு
பூச்சந் தகமுதன் மேவியங் கிடுதே, லோதுபல் லுருஞ்ச
லொண்பதம் விளக்க லுரைத்தவெற் றிலைதின லிவைதா,
மாதிநற் குரவ னரியசந் நிதியி லடியவ ரறவிடுந் தொழிலே.

(இ-ள்.) நல் - நல்ல, குரவன் - ஆசாரியரது, அரிய - அருமையான, சந்நிதியில் - சந்நிதானத்தில், அடியவர் - மாணாக்கர், அற - அத்தியந்தம், விடும் - விடத் தக்க, தொழில் - செயல்கள், ஆசனம் - ஆசன(த்) திருத்தலும், சயனம் - படுக்கை (யிற் படுத்தலும்) வாகனம் - ஊர்தி (ஊர்தலும்), மிதி அடி - பாத ரக்ஷை (இடுதலும்), அத்திரம் - பாணம் (தாங்குதலும்), குடை - (குடை பிடித்தலும்) ஆபரணம் - பணி (அணிதலும்), மீது - (சரீரத்தின்) மீது, வண் - வண்மையான, அயிலம் - தைலம் (தேய்க்க), குளி - குளித்தலும், மேவி - விரும்பி (ஆடம்பரமாக), பூ - புஷ்பம், சந்தகம் - சந்தனம், முதல் - முதலியன, இடுதல் - அணிதலும், ஓது - சொல்லாநின்ற, பல் - பல்லை, உருஞ்சல் - உருஞ்சுதலும், ஒண்(மை) - ஒள்ளிய, பதம் - காலை, விளக்கல் - கழுவுதலும், உரைத்த - (அடியவர்க்கான தென ஆன்றோர்) கூறிய, வெற்றிலை - தாம்பூலத்தினை, தினல் ஆதி - அருந்தலு முதலிய, இவை - இவை (பதின் மூன்று) ஆம். (எ-று)

(இ-பு.) ஆசநம் முதலியவற்றின் உபயோகத்திற்கு ஏற்ற வேறு வேறு தொழில்கள், இடுதல் என்பதனை, உபலக்ஷணமாகக் கொண்டு வருவிக்கப்பட்டன. ஒடு - இரண்டும் எண்ணிடைச் சொற்கள். 'முதல' என்னும் அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைப் பெயர் ஈற்று அகரம் குறைந்து, 'முதல்' என நின்றது 'மேவி யன்று' - 'இவை தாம்' - என்புழி, அன்று - தாம் - இரண்டும் அசைநிலைகள். தொழிலே - ஏ - ஈற் றசை. ஆதி என்பதனை, நிலையாதி யிவை - என அக்ஷயித்துக் கொள்க. தொழில் - எழுவாய், இவை - பயனிலை.

## மெய்ந் நெறி விளக்கம்

22. இறைவன்முன் பசிங்கித மாகவந் திடுதே லிட்டவே
டத்தினோ டணைதல், கறையுறுஞ் சாயை யிறைவன்மேற்
படுதல் கடவுளி னிழறன்மேற் படுதே, லுறைதரு தலத்தின்
மேலிருந் திடுதே லுளமுக முகுளமா யிருத்த, லறைதரு
மமல னரியசந் நிதியி லடியவ ரறவிடுந் தொழிலே.

(இ-ள்.) அறை தரும் - (ஈசுர சொரூபமாக வேதம்) கோஷிக்கின்ற, அமலன் - நின்மல (ஆசாரிய)ரது, அரிய - (கிடைத்தற்கு) அருமையான, சந்நிதியில் - சந்நிதானத்தில், அடியவர் - மாணாக்கர், அற - அத்தியந்தம், விடும் - விடத் தக்க, தொழில் - செயல்கள், இறைவன் - ஆசாரியரது, முன்பு - சந்நிதியில், அசிங்கிதம் ஆக - சத்தம் இன்றி, வந்திடுதல் - அணுகுதலும், இட்ட - (வெளிச் செல்வத்) தரித்த, வேடத்தினோடு - (குல்லாய், சட்டையாதி) வேஷத்தோடு, அணைதல் - கூடுதலும், கறை - குற்றம், உறும் - பொருந்தியிருக்கின்ற, சாயை - (தனது) நிழல், இறைவன் - ஆசாரியர், மேல் - மீது, படுதல் - பொருந்தும்படி செய்தலும், கடவுளின் - ஆசாரியரது, நிழல் - சாயை, தன் - (மாணாக்கனுடைய) தனது, மேல் - (சரீரத்தின்) மேல், படுதல் - பொருந்தும்படி செய்தலும்,

உறை தரு - (ஆசாரியர்) இருக்கின்ற, தலத்தின் மேல் - இடத்தி லின்றும் மேலான இடத்தில், இருந்திடுதல் - இருத்தலும், உளம் - மன மாகிய, முகம் - இடம், முகுளம் ஆய் இருத்தல் - (ஆசாரி யரின் வாக்கைக் கிரகிக்கக் கூடாத வாறு அநாத்ம விஷயத்தில்) குவித்து, அல்லது, கூம்பி யிருத்தலும ஆகிய (இவை ஆறு மாம்.)

(இ-பு.) வைத்திடுதல் - இருந்திடுதல் - இடு இரண்டும் பகுதிப் பொருள் விகுதி. படுதல் - என்னும் தன் வினை இரண்டினையும், படுத்தல், எனப் பிறவினை யாக்கிக் கொள்க. உறை தரு -அறை தரு - தரு - இரண்டும் துணை வினைகள். உள முகம் - பண்புத் தொகை. தொழிலே - ஏ - ஈற் றசை. தொழில் - எழுவாய். (அவாய் நிலையால்) பெற்ற ஆம், பய னிலை.

ஞாந சித்தி

23. போற்றுகை தவிர்த னாதன் பொருளினைப் புசித்த லீதல், தூற்றுத றோடந் தன்னைச் சொன்னவை மறத்தல் பொய்கள், சாற்றுதல் குலமுங் கல்வி தநத்தபி மாநம் பண்ணல், மாற்றுதல் கொடுத்த றன்னை மற்றிவை குருவோ டாகா.

(இ-ள்.) போற்றுகை - (ஆசாரியரைத்) தோத்தரித்தலை, தவிர்தல் - செய்யாதிருத்தலும், நாதன் - ஆசாரியரது, பொருளினை - திரவியத்தினை, புசித்தல் - அநுபவித்தலும், ஈதல் - (அதனைத்) தானம் கொடுத்தலும், தோடம் தன்னை - (ஆசாரியரது) தோஷத் தினை, தூற்றுதல் - (பலர் அறியச்) சொல்லுதலும், சொன்னவை (குரு) ஆக்ஞைகளை, மறத்தல் - மறதலித்தலும், பொய்கள் (குரு வினிடத்தில்) பொய் வார்த்தைகளை, சாற்றுதல் - சொல்லுதலும், குலமும் -(மாணாக்கன்) குலத்திலும், கல்வி - வித்தையிலும், தநத்து- திரவியத்திலும், அபிமாநம் - (தான் குருவினும் மேலானவன் என் னும்) அபிமாநம், பண்ணல் - செய்தலும், கொடுத்தல் தன்னை

